உ

சிவமயம்.

அண்ணாமலைநாதர் துணை.

# வல்லாள மகாராஜன் சரிதம்.

இது

புதுவை,

தமிழ்க்கல்விச்சங்கத்தலைவரும், கண்ணப்பர்கலம்பகம்
முதலிய நூலாசிரியரும், பொன்மலர் முதலிய
பத்திராசிரியரு மாகிய
துரைவடிவேலனார் பாடியது.





புதுவை,
ஸ்ரீ மீனாக்ஷி குமரவேல் பிரஸ்ஸில்
பதிப்பிக்கப் பெற்றது.

விக்கிரம ஹு மாசி மீ 1941.

விலை அணா - 2.

உ

சிவமயம்.

அண்ணுமலைநாதர் துணை.



# வல்லாள மகாராஜன் சரிதம்.



இது

புதுவை - வித்துவான்

துரைவடிவேலனுர் பாடியது.






புதுவை,

ஸ்ரீ மீனுக்ஷி குமரவேல் பிரஸ்ஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

விக்கிரம ஷு மாசி மீ 1941.

விலை, அணு—2.

11-7

# மதிப்புரைகள்.

---

சென்னை, மகாமகோபாத்தியாயர், டாக்டர்,

உ. வே. சாமிநாத ஐயர் எழுதியது.

புதுவையிலுள்ள ஆசிரியர், வீ. துரைசாமி முதலியார் இயற்றிய "வல்லாள மகாராஜன் சரிதத்தை"ப் பார்வையிட்டேன். நன்றாகவே அமைந்துள்ளது. இது தமிழுலகத்திற்குப் பயன் றரும்.

சிதம்பரம் - அண்ணாமலைநகர்ப் பல்கழகப் பேராசிரியர்,

கா. சுப்பிரமணியப்பிள்ளை M. A. M. L. எழுதியது.

புதுவை ஆசிரியர், வீ. துரைசாமி முதலியார் இயற்றிய "வல்லாள மகாராஜன் சரிதத்தை"ப் படித்துப் பார்த்தேன். அது யாவருக்கும் விளங்கக்கூடிய இனிய எளிய செந்தமிழ் நடையிற் குற்றமற்ற வெண்பாக்களால் ஆக்கப்பட்டுள்ளது; ஒழுக்கச்சார்பாயும் சமயச்சார்பாயும் உள்ள நல்ல கருத்துக்களைத் தக்கமுறையில் விளக்குகின்றது; இறைவன் அன்பர்க்கு அருள்பொழியுந் திறத்தை எடுத்துக்காட்டுவதில் இது சிறந்த நூலாகத் திகழ்கின்றது; இதன் கண் சிவபக்தி அடியார் பக்திகளின் இன்றியமையாமை நன்கு புலனாகின்றது; ஆதலால், இது தமிழ்வாணராற் போற்றற்குரியது.

சிவநேசன் பத்திரிகை.

வல்லாளமகாராஜன் சரிதம் இனிய வெண்பாக்களாற் சீரியமுறையில் ஆக்கப்பெற்றது; இலக்கியச்செறிவும் அண்ணலாரின் தண்ணருட்செறிவும் வல்லாள மன்னன் மனவுறுதியும் அதனாலெய்திய பயனும் மலிந்து காணப்பெறுவது. இதனைக்கற்போர் பெரும் பயனடைவர்.

தமிழ்ப்பொழிற் பத்திரிகை.

வல்லாள மகாராஜன் சரித்திரச் செய்யுட்கள் இனிமையும் தெளிவும் உடையன. இதனில் அரசியற்பொருளைத் தொடர்புபடுத்திக் கூறுதலும் தேவாரம் முதலிய திருமுறைக் கருத்துக்களை எடுத்தாளுதலும் பாராட்டற்பாலன. திருவருளாற் செய்யுள் செய்யும் திறன்பெற்ற இந்நூலாசிரியர் இன்னும் பலநூல்கள் செய்ய வேண்டுகிறோம்,

---

சிவமயம்.

# நூன்முகம்.

யாழ்ப்பாணம்-தெல்லிப்பழையைச்சேர்ந்த மாவைநகரினரும்,
உலகியல்விளக்கமென்னு நூலின் ஆசிரியரும்,
தொல்காப்பியத்திற்குப் புத்துரைகாண்போரும் ஆகிய
S. நவநீதகிருஷ்ண பாரதியார் இயற்றிய

வெண்பா.

பரைசாமி தன்மகனும் பான்மைகொள் வல்லாள
அரைசா னேன்காதை யமிழ்தைத்-துரைசாமி
தந்தான் புகழேந்தி தாரணியிலே பின்னும்
வந்தானே என்ன வனைந்து.

ஆசிரியப்பா.

பொன்னைப் புகழைப் பூவுல காட்சியைத்
தன்னை மனைவியை யென்று மதியா
தன்னை பங்கி னானர்க் குதவிய
சொல்லாள் சீர்த்தி வல்லாள வேந்தன்
5. வாலா றெல்லாம் நிலாப் புனைந்து
காவியங் கனிந்த ஓவியக் காட்சியிற்
சங்கத் தமிழ்மகண் மங்கல வணியிற்
பத்தித் தேனொடு பாயுநீர் வீழ்ச்சியிற்
கல்லார் தமக்குங் கற்றவர் தமக்குமோர்
10. நல்லார் வந்தரூஉ நாடகக் காட்சியின்
விருந்தின் மருந்தின் வேதத் தமிழின்
எழுத்துஞ் சொல்லும் பொருளு மாகி
வழுத்தப வந்த வாய்மைசா லிலக்கணம்
அவாவிய விலக்கிய மாமென் றறைந்தான்;
15. பாவலர் தமக்கொரு பாவலன் பகரும்
நாவலர் தமக்கொரு நாவலன் நால்நவில்
ஆசிரி யர்க்குமோர் ஆசான் விழுமிய
அன்பிற் கெல்லை யாகுகண் ணப்பர்க்
கின்பிற் கெல்லையா வியைந்ததோர் கலம்பகம்

20. பாடித் தேடிய பல்புக ழாளன்
இமிழ்திரை வரைப்பி னென்றும் புகழுறூஉம்
அமிழ்த மழலைத் தமிழ்மக வளித்தோன்
மின்மலர் பொன்மலர் விழைதக வணிகெனத்
தன்மன மகிழுபு தமிழ்த்தாய்க் கீந்தோன்
25. ஆடுகொடிப் புதுவை நீடுநகர் வாழ்வோன்
சிவமெலாஞ் சேர்தரு சிந்தைத்
27. தவமெலாம் பயில்துரை சாமிசற் குணனே.

---

மதுரை - திருவள்ளுவர் நிலையம்,

கவிராஜபண்டிதர். ஜெகவீர பாண்டியனூர் இயற்றிய

விருத்தம்.

(1) சொல்லாலு முணர்வாலுந் தொடர்வரிய
பரம்பொருளாய்த் துலங்கி யெங்கும்
எல்லாரு மருணகிரி யெம்பெருமான்
பிள்ளையென எய்தப் பெற்ற
வல்லாள வள்ளலுயர் சரிதமதை
வெண்பாவில் வார்த்தெ டுத்து
நல்லாரெல் லாங்கண்டு நயமுடைய
தெனக்காண நயந்து தந்தான்.

(2) அன்னவன்றான் யாவனெனி லான்றபுகழ்ப்
புதுவைநக ரமர்ந்து வாழ்வோன்
சொன்னலமும் பொருணலமுஞ் சுவையோர்ந்து
பலநூல்கள் சூழ்ந்து கற்றோன்
என்னனைய புலவர்கள்பா லின்னயங்கொ
ணட்புடையான் எவர்க்கு மன்பன்
மன்னுபுகழ்த் துரைவடிவே லென்னவரு
துரைச்சாமி மதிமிக் கோனே.

---

நக்கீரர், கபிலர் முதலிய ஆராய்ச்சி நூல்களின் ஆசிரியரும், திருவிளையாடல் முதலியவற்றின் உரையாசிரியரும் ஆகிய பண்டித, ந. மு. வேங்கடசாமி நாட்டார் இயற்றிய

வேண்பா.

வல்லாள மன்னன் வளர்சரிதை மாநிலத்தோர்
எல்லாரும் போற்ற வினிதுரைத்தான்—சொல்லாரும்
பண்பார் துரைசாமிப் பாவலன் இன்சுவைசேர்
வெண்பாவி னாலே விரித்து.

---

கொங்குநாடு-ஜலகண்டபுரத்தைச்சேர்ந்த தோரமங்கலம் வித்துவான், அ. வரதநஞ்சைய பிள்ளை இயற்றிய

விருத்தம்.

(1) பரைவடிவே தன்வடிவா மொருமுதல்வ
னுள்ளுருகிப் படரு மிந்த
வரைவடிவே தெனமாலுந் திசைமுகனுந்
தேடிமிக வருந்தச் செய்வோன்
நரைவடிவே றுயர்த்தூர்ந்தோற் குளமீந்த
வருட்செல்வ நாவ லோனுந்
துரைவடிவே லப்பெயரோன் புதுவைநகர்த்
தமிழ்க்கலையின் சுவைதேர்ந் தோனே.

(2) நல்லாளன் புடன்மருவு மொருபாகன்
காலுண்ணி நாணு மேரு
வில்லாளன் கேவலத்தி னின்றுயிர்கள்
சகலநிலை மேவச் செய்யும்
வல்லாளன் திருவருணைப் பதியிடைச்செய்
விளையாட்டின் வரலா றுன
வல்லாளன் சரிதையினைப் புலவர்விருந்
தாகவெண்பா வனைந்திட் டானே.

---

திருத்தொண்டர் புராணத்திற்குப் புத்துரைசெய்து
வெளியிடுபவராகிய
கோவை-திரு. C. K. சுப்பிரமணியமுதலியார். B.A. இயற்றிய
வேண்பா.

அண்ணா மலையா ரருள்பெற்ற வல்லாளன்
தண்ணீர்மை நற்சரிதஞ் சாற்றினான்—உண்ணீர்மை
நல்ல துரைவடிவேல் நாமன் றமிழகத்தில்
வல்லாளர் வாழ்த்த மகிழ்ந்து.

---

காஞ்சிபுரம் - ஆளவந்த வள்ளலார் ஆதீனம்
ச. சிவசாமி தேசிக ரியற்றிய
வேண்பா.

(1) புதுவைப் பதிவாழ் புலவர் விரும்பும்
சதுரன் றுரைசாமிச் சான்றோன்—மதுமிக
வல்லாளப் போசன் வண்சரிதஞ் சாற்றினான்
சொல்லாளும் வெண்பாவாற் சூழ்ந்து.

(2) வாழ்க துரைசாமி வண்கவிஞ னென்நாளும்
வாழ்க வள்ளல் வல்லாளன் மாசரிதம்—சூழ்கருத்தாய்
மேதினியிற் கற்போரும் வேட்கைமிகக் கேட்போரும்
நீதியொடு வாழ்கவள நீண்டு.

---

காஞ்சிபுரம் - வித்துவான்,
ப. தில்லை முதலியார் இயற்றிய
வேண்பா.

எல்லாரு மேத்தருணை யீசற்குத் தன்னிளைய
இல்லாளன்பாக விசையச்செய்—வல்லாளன்
வெண்பாச்செய் தான்புதுவை மேவுதுரை சாமிவல்லோ
பண்பாச்செய் யுள்வளநீ பார். [ன்

புதுவை - ஸ்ரீ அரவிந்தர் ஆசிரமம்,
சுவாமி, சுத்தானந்த பாரதியார் இயற்றிய
வெண்பா.

அண்ணா மலையா ரருளா லறஞ்செய்து
கண்ணா மகப்பேறு கண்டுவந்த—புண்ணியனும்
வல்லாள மன்னன் வரலாற்றைச் செந்தமிழில்
வல்லாளன் சொன்னான் மகிழ்ந்து.

---

இந்நூலாசிரியர்க்குப் பிரதமமாணவர் புதுவையைச்சேர்ந்த
முத்தாலுபேட்டை,
க. சோமசுந்தரம் பிள்ளை இயற்றிய
விருத்தம்.

(1) இல்லாளன் பாலருணை யீசற்கிந்
தவனைமக வெனவே பெற்ற
வல்லாளன் றன்சரிதம் வண்டமிழ்சேர்
வெண்பாவால் வரைந்து கற்ற
சொல்லாளும் புலவர்புகழ்ந் திடவளித்தார்
புவியிடத்துத் துகடீர் கல்வி
நல்லாள ரெனதறிவா சிரியரெனாந்
துரைசாமி நாவ லோரே.

(2) முன்னுமொரு விழைவெழலாங் கண்ணப்பர்
கலம்பகத்தை மொழிந்தார் பாரிற்
பன்னுமொரு சுவையமுதாய்ப் புலவருளத்
தூண்டுமகிழ் பான்மை கண்டு
பின்னுமொரு வல்லாளன் காதையெனுந்
தீந்தேனின் பெருக்கை யீந்தார்
துன்னுமொரு தமிழ்க்குரிசில் துரைவடிவே
லெனுநாமத் தூய்மை யோரே.

---

மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் வைத்துநடத்திய பண்டிதர்
பரீக்ஷையிற் றேர்ச்சிபெற்றவராய்த் துறவியாயுள்ள
சிதம்பரம் - சோதியாசிரமம்,
சி. நாராயணசாமியார் இயற்றிய
வேண்பா.

(1) வள்ளலிறை வல்லாளன் வான்புகழை யிவ்வுலகோர்
கொள்ளை கொளவிரித்துக் கூறினனே—தெள்ளுதமிழ்ப்
பாவான் மகிழ்புதுவைப் பாவலன்சீ ரின்பிருக்கு
நாவான் றுரைவடிவே னன்கு.

(2) மன்பதைகள் போற்றவரும் வல்லாளன் சீரிதுதான்
அன்பர்களி கொள்ளவிருந் தானசுவை—யின்பளித்துக்
கற்பனையுஞ் சொற்பொலிவுங் காட்டிக் கவிஞருளம்
விற்பனைகொண் டாளு மிக.

---

இந்நூலாசிரியர்க்கு மாணவர் புதுவையைச்சேர்ந்த
லாசுபேட்டை - வித்துவான்,
சு. குமரசாமி செட்டியார் இயற்றிய
வெண்பா.

(1) பொன்னுரிதழி புனைவோன் புதல்வனெனு
அந்நா ளரும்பே றடையரசன்—றன்னுமச்
சீரார் கதைபுதுக்கிச் செய்தாரென் றேசிகராம்
போரா மறிஞர் பிரான்.

விருத்தம்.

(2)சிந்தையிற் புலவர் கொள்ளுந் திறற்றுரை வடிவே லென்னு
சந்தமார் நாமத் தார்செந் தமிழியல் மலராச் சொற்ற [ஞ்
நந்துசீர் வல்லா ளன்ற னற்கதை நயங்கள் கண்டோர்
முந்துநற் பத்தி யின்ப மூற்றிமே னெறிகாண் பாரே.

---

இஃநூலாசிரியர்க்கு மாணவர், புதுவையைச்சேர்ந்த
பெத்துசெட்டிபேட்டை உபாத்தியாயர்
சு. கந்தசாமி முதலியார் இயற்றிய
ஆசிரியப்பா.

போன்மா மேனிப் புண்ணிய மூர்த்தியைத்
தன்மா மகனைப் பெற்ற தனிச்சீர்
வல்லா னன்றன் வரலா றென்னு
நல்லா ரமிர்த நானிலத் துதவினர்
5. கண்ணப் பர்க்கோர் கலம்பக மியற்றிய
அண்ண லெனக்கோர் ஆசா னனவர்
வங்கம் பலவுறூஉம் வளமார் புதுவையிற்
சங்கம் பலநிறீஇத் தமிழ்த்தொண் டாற்றினர்
மேன்மைகொள் துரைவடி வேலர்
10. பான்மைகொள் சிவநெறி பற்றுபா வலரே.

குறிப்பு.

புதுவை-ஆனந்த ரங்கப்பிள்ளை வீதி ஸ்ரீமான், தெ-முத்துக்குமாரசாமி முதலியாரும், முதலியார்பேட்டை டாக்டர்-ஸ்ரீமான், பியேரே முதலிய சில அன்பர்களும் இந்நூல் வெளியீட்டிற்கு ஊக்கமளித்து நின்றனர்.

உ

சிவமயம்.

அண்ணாமலைநாதர் துணை.

# வல்லாள மகாராஜன் சரிதம்.

காப்பு.

(1) எல்லாரும் போற்று மியலருணை மன்னவனும்
நல்லாளன் வல்லாள னற்கதையைச்—சொல்லார்ந்த
பாவினு லேத்தப் பனைக்கைக் கரிமுகன்றாள்
நாவினு லேத்திடுவா நன்கு.

அண்ணாமலையார்.

(2) மாதவனுங் கஞ்ச மறையவனுங் காணாத
நாதனழற் செம்மலையா நம்பன்றாட்—போதனைகப்
பெற்றாரே பெற்றார் பிறவாப் பெரும்பேறு
மற்றாரே பெற்றார் வரம்.

உண்ணாமுலையார்.

(3) பல்லுயிர்க்குந் தாயாய்ப் பரம னிடம்பயிலும்
நல்லுலக நாயகியுண் ணாமுலையாள்—மெல்லடியை
எப்பகலு முள்ளத் திருத்தி மனந்திருத்திற்
றப்பகலு முள்ளவினை தான்.

முருகர்.

(4) வேற்கைக் குமரன் விரையார் திருவடியை
ஏற்கைக்கு மென்னெஞ் சினையங்கதே—பார்க்கைக்கும்
இன்கூற்று மாய வெழின்மடவார் தந்திரமும்
வன்கூற்று மாய மதித்து.

நந்திதேவர்.

(5) அந்திவண்ணர் வெள்ளி யணிவரையிற் காவல்புரி
நந்திவண்ண மாமலர்போ னல்லடியைப்-புந்திவைப்பார்
பொய்ஞ்ஞான நீங்கிப் புவியி லொளிமிகுந்து
மெய்ஞ்ஞானம் பெற்றடைவார் வீடு.

நால்வர்.

(6) காழியா சர்க்குமுனங் கற்றானே தெப்பமென
ஆழியா சுய்க்கவரு மப்பருக்குஞ்-சூழிசைகொள்
நம்பியா ரூரர்க்கு நல்வாத வூரர்க்கும்
நம்பியா ளானவனே நான்.

அவையடக்கம்.

(7) என்னு வியைந்த வியற்கவியா லிக்கதையை
நன்னு வலர்முன் நவில்கின்றேன்-அன்னூர்
பிறைகண்ட வார்சடையான் பேணடியார் சீரில்
குறைகண் டறைவாரோ கூறு.

---

நூல்.

நாடு.

(1) தாமரைக்கண் மாயவனுந் தாமரைக்கண் வாழயனும்
பூமியுளும் வானுள்ளும் புக்கறியா-நாமவழற்
செம்மேனி யெம்மான் றிருவருணை நாடிலங்கும்
எம்மே னிலத்திற்கு மேர்.

(2) கரும்புடனே பூகங் கவின்கதலி தாழை
விரும்புந்தே மாவருக்கை மேவி-நிரம்புபொழில்
எங்கும் பரவி யிருக்கு மெழில்மிகுந்தே
அங்கும்ப ரேத்திடநா டார்ந்து.

(3) அன்னப்புட் செய்யா ரவிந்த மாமலரில்
மன்னப்பன் னம்மேல் வயங்குகுடை—என்னவுற
நெற்கதிர்கள் சாமரைபோ னேர்ந்திருபா லும்மிரட்டும்
நற்கதிதந் தாளருணை நாட்டு.

(4) நந்தார் தடத்திலொரு செந்தா மரைமலர்வாய்
வந்தார் கரைத்தருவெண் மாமலர்கள்—சிந்தத்தேன்
மேலொழுகல் வேள்வித்தீ வெண்பொரியு நெய்யுமிடல்
போலொழுகல் காட்டும் புறம்.

மலை.

(5) வீழு மருவி வியன்முரசு போலதிர்ந்து
தாழுமருஞ் சாரற் றனிமுழையிற்—சூழுலகிற்
பற்றற யோகியரும் பன்மா தவருமிக
வுற்று தரிப்பா ரொளி.

(6) கங்குலிற் சோதிக் கவின்மாந்தன் செவ்வொளியாற்
பொங்கழலா மீசனையே போன்றதே—திங்கள்
முடிமே லுறக்கேழல் மொய்த்ததரு வின்கீழ்ப்
படிமே லுறக்கிடந்த பண்பு.

(7) வெண்டா மரைக்கோவை போலன்ன மேனிரலாய்
விண்டாவி யேபறக்க மேதகவே—கொண்டு
வருகருணை மாமலைவாழ் வாரும் வளங்கள்
பெருகருணை நாடெழிலைப் பெற்று.

(8) குழுவார் கிளிகள் குறிகவண்கற் கஞ்சி
முழுவான் பறந்தேகல் முன்னர்ச்—செழுமா
விலைத்தோ ரணமென் றிலகுமே யண்ணு
மலைத்தே சமர்ந்த வனப்பு.

## நகர்.

(9) இருபா னிரண்டுதல மேய்ந்தநடு நாட்டில்
வருபான்மை யண்ணு மலையே—திருவார்ந்து
நெல்வளனும் பொன்வளனு நீடுகுடி வாழ்வளனும்
பல்வளனும் பெற்றிலகும் பார்.

(10) நினைவார்க்கு விடுதரு நீடுதல மீதே
கனைமா கடலுலகிற் காண—வினைபோகும்
அண்ணு மலையோர்க் தணுகா ரறிவிலரே
எண்ணுமலையோ விவர்.

(11) திருக்கோயிற் பூசை தினங்காண வந்தே
மருக்கோலுங் கூந்தன் மடவார்—பெருக்கார்வம்
நெஞ்சடைய நாட்டியங்கள் நித்தல் நிகழ்த்திடுவார்
செஞ்சடைய நாதன் றிறத்து.

(12) மறையவரும் மாதவரும் வாழ்ந்திடுசான் றோரும்
இறையவரும் பத்தர்களு மெங்குங்—குறைவறவே
சேர்ந்துறைய நின்ற திருநகரே தேவர்களும்
நேர்ந்துறைய வைப்பார் நினைவு.

(13) அடியார் திரள்திரளா யங்குற் றமரப்
படியார் புகழ்மடங்கள் பல்கி—இடமாரும்
தீயவினை தீர்க்குந் திருநீறு மைந்தெழுத்தும்
மாயவினை தீர்க்கு மருந்து.

(14) அன்னதலங் கண்டோ ரடைபேறு வேறுபுவி
யென்னதலங் கண்டோரு மெய்திடார்-பொன்னுலகோ
ருப்போதும் வந்தே முடிவணங்க மண்ணுலகோர் [ர்
எப்போதும் வந்திப்பா ரீங்கு.

(15) மண்ணிற் பிறந்தார்க்கு வான்பேறு நல்லறமே
எண்ணிச் செயலீச னின்பவடி—நண்ணிப்
பிறப்பற்று வீடு பெறலென்ப ரங்ஙன்
உறப்பற்று மன்ன னுளன்.

(16) அன்னான் சரித மகலிடத்தோர் கேட்டுருக
என்னு தாவா வியம்புகேன்—மின்னார்
சடையான் விடையான் றளாத பூதப்
படையான் அடிகள் பணிந்து.

வல்லாளன்சீர்.

(17) சீர்கொண் டிலகுந் திருவருணை நன்னாட்டில்
ஏர்கொண்ட செங்கோ லினிதோச்சிப்—பேர்கொண்ட
சொல்லாளன் சோணகிரிச் சோதிமலர்த் தாள்மறவா
வல்லாளன் என்பானோர் மன்.

(18) மாந்தர்கடங் கண்ணு மனமுங் கவர்வதற்குப்
போந்தவனென் றெண்ணும் புரவலன்றான்-ஏந்தெழிலா
தாரணிந்து பூத்த தடம்புயங்க ளோரிரண்டும் [ன்
போரணிந்து பூத்த புகழ்.

(19) அறமு மருளு மவாவறலு மானப்
பொறையு மிவைகள் பொருந்திக்—குறையகற்றி
யோருடம்பு கொண்டங் கொளிர்வதெனு வுற்றானவ்
வேருடம்பு கொண்ட விறை.

(20) வாடக் கிரிகள் வளர்தோளான் வல்லாளன்
நீடக் கினிகுலத்தி னேர்வந்தோன்—ஆடற்
குவந்திருந்த சோணகிரி யும்பனையே நம்பித்
தவந்திருந்தப் பெற்றான் றலத்து.

(21) கண்ட மகளிரையே காதல் செயாமன்முனங்
கொண்ட மகளிரையே கூடிடுவோன்—மிண்டிப்
பொருவார்க்குக் காலன் புகழ்வார்க்குக் கன்னன்
மருவார்க்குந் தாரணிந்த மன்.

(22) படைமுதலா வாறங்கம் பண்பி னுடையான்
தொடையரசர்க் கேறெனவே தோன்றி - அடைபொரு
மேன்மே லுளவாக்கி மிக்கீட்டி யேகாத்து [ளே
வான்மே லுளர்வாழ்த்த வாழ்ந்து.

(23) காட்சிக் கெளியன் கடுஞ்சொ லிலானின்சொல்
மாட்சியி னீந்து வகையளிப்பான்—ஞாட்பில்
பகைவர்க்கஞ் சாமைமுதற் பல்குணங்க ளென்னுந்
தகைவர்க்கஞ் சார்ந்தான் றக.

(24) இறைகடியன் கண்ணில னென்றுலகோர் சொல்லுங்
குறைகடிந்த கொற்றவனக் கோமான்-முறைகாக்கும்
தன்னையெனக் கொண்டு தாணி தனைக்காப்பான்
அன்னையெனக் கொண்டாடு வார்.

(25) தான்முறைசெய் தேபிறரற் றன்குடிகை யாதுபுரி
கோன்முறையா லேதண் குடைநிழற்றி-நான்முறையே
பாராண்ட மன்னர் பலர்க்கு மொளியிவனென்
பாராண் டமர்ந்தார்கள் பார்த்து.

(26) தன்குற்ற நீக்கியே சாற்றுபிறர் குற்றத்தை
நன்குற் றகற்றி நடுநின்று—பன்குற்றம்
போக்கும் பெரியார் புகல்பொருளைக் கேட்டொழுகிக்
காக்கும் பெரியான் கலந்து.

(27) காலமு நல்லிடமுங் காண்வலியுங் கைகண்டு
ஞால முறும்பகையை நன்கழித்தே—சீலம்

பெருகவே தேவர் பிரானருளாற் பேணி
உருகவே யாண்டா னுலகு.

(28) வானையே நோக்கி மகிழுமுயிர் போற்குடிகள்
கோனையே நோக்கிக் குளிர்ந்திடுவார்—யானை
படைக்கணியாக் கொண்டு பயனே வளாக்
கடைக்கணியா வெல்வான் கறுத்து.

(29) ஒற்றால் யாண்டு முறுகருமந் தானறிந்து
பற்றிவே றொற்றாற் பயன்றேர்ந்து—மற்றுமொரு
சீரொற்றி னாலே செயல்பார்த்துச் செய்முறையான்
பேரொற்றி னன்பார் பிற.

(30) கோல்வளையார் கண்ணே கொலைபுரியு மந்நகரில்
மால்வருநல் லாரிடையே மன்கொடிய—கால்சேர்
சிலம்பே புலம்புஞ் செறிபுணர்ச்சிக் கண்ணே
வலம்பேசும் பொய்வாய் வரும்.

(31) தீயனவா மங்கே திகழுடிசிற் சாலையெலாம்
மாயவினை வேசைமனை மன்னிடுமே—தூய
துறவோர்க்கு நாரியரே தொல்பகைநல் கூர்ந்தார்
அறவோர்க்கீ வார்புகழை யாங்கு.

(32) புலியும் பசுவும் பொருந்துந்துறை யொன்றின்
மலைவின்றி நீருண்டு வாழ—நலிபருந்தும்
பைங்கிளியு மோர்கூட்டிற் பண்புடனே நண்புகொள
அங்கிவற் றுண்டா னரசு.

(33) புண்ணியவெண் ணீற்றுநெறி பூதலத்தே யோங்கிடுமா
றெண்ணியவெண் ணத்தோ டினிதாண்டு—நண்ணுமணி
கண்டர்க்கே யாளாய்க் கருதி யடிபணியுந்
தொண்டர்க்கே செய்வானற் றொண்டு.

(34) வைகறைவா ளேந்து காபாலர்க் கேறனையான்
வைகறைவாய்ச் செய்யும் வகைமுடித்தே-உய்திறத்தால்
மஞ்சோதி பாகத்து வானமுதாய் நஞ்சுண்ட
செஞ்சோதி காண்பான் றினம்.

(35) அண்ணா மலையா ரடிபணிந்து போற்றியபின்
உண்ணா முலையார்தா ளொன்றியே-பண்ணாப்
பாடித் துதித்துப் பவமறவே சிந்திப்பான்
கோடித்துக் கோயில்வலங் கொண்டு.

(36) அரசவைக்க ணேகி யமைச்சர்முத லோர்கள்
பரசவைத்த வாசனமேற் பற்றி-விரசவனி
மன்பதைகட் கின்ப மருவ முறைசெய்வான்
துன்பதையே தூரத் தொலைத்து.

மகப்பேறெண்ணல்.

(37) மல்லமா தேவியுடன் வான்சல்ல மாதேவி
நல்லமா தேவியாய் நண்ணியிடப்-பல்வகைப்பே
றெல்லா மிருந்துமோ ரின்மழலைச் சொன்மதலை
இல்லா திருந்தா னினைந்து.

(38) ஆல்விழுது விட்டதென அன்பாகப் பெற்றிடுசேய்
மேல்விழுவா னோடிவந்து மெய்தழுவிப்-பால்விரும்பி
உண்டவாய் முத்த முதவவாழ் வார்மனையிற்
கண்டவாய் முத்திபெற்றார் காண்.

(39) நாடுமகப் பெற்றே நலமடையார் தம்வீடு
காடுமணல் மேடெனவே கண்டுரைப்பர்-பீடுமக
வின்சொ விளமழலை கேட்டின்ப மெய்துசெவிக்
கென்சொலினு நோத லின்று.

(40) துணையோ டிருந்து தொகுமின்ப மெய்தி
இணையிலா வாழ்வுற் றிருந்தும்—அணைபயனென்
இல்வாழ்க்கை நல்ல விளம்புதல்வ னில்லையேல்
நல்வாழ்க்கை யாமோ நவில்.

(41) கண்ணி லுடலுங் கவின்கற் பிலாப்பெண்ணும்
தண்ணறும்பூ வில்லாத் தனித்தடமும் - விண்ணிலகு
சந்திரனில் லாவிரவும் போலென்றே சாற்றிடுவார்
மைந்தரில் லாத மனே.

(42) என்றுலகங் கூறுதல்கேட் டிம்மன்ன னம்மகவு
நன்றுபெற வெண்ணியே நான்மகிழ-என்று
வருமோகன் காணவென மானுள்ளந் தன்னில்
அருமோகங் கொண்டா னவன்.

(43) அமைச்சரோ டாய்ந்து மானு ரடியார்
தமைச்சாணந் தாழ்ந்தந் தமியே-னமைப்பார்
இளம்புதல்வ னின்றி யிருப்பதறீர் தற்கு
விளம்புதல்செய் வீரென்றான் விண்டு.

அறஞ்செய்கென்றல்.

(44) அன்னவர்சொல் வாரெம் மாசே யறநெறியில்
முன்னுறச்செல் வார்கான் முளைகாண்பர்-என்னவுரை
செய்யக் கருத்தைத் திருத்தி யறஞ்செய்தே
உய்யக் கருதினு னேர்ந்து.

(45) தருமம் பலமே தருமுண்மை மற்றைக்
கருமம் பலனில்லை கண்டோம்-பெருமண்ணில்
வாழ்ந்தார் மறைந்தார் வளர்தருமம் பூவுலகில்
சூழ்ந்தார்த லாகுந் தொடர்ந்து.

(46) தான்செய்த நல்லறமே தன்னோடு செல்வதலால்
வான்செய் பொருள்கள் வழிக்கொள்ளா-ஊன்செய்த
காயந் தழலிற் கருகிப் பொடியாகும்
மாயந் தனையோர்க மற்று.

(47) மிக்க சிறப்புடனே மேதகவே வாழ்ந்தாலுந்
தக்கவற மின்றேற் றகையுண்டோ-தொக்கவெழில்
மட்பாவை மேலழகு மாண்பொன்னி னாலமைந்த
திட்பாவை மேலழகுந் தேர்.

(48) என்னப் பலவகையு மெண்ணியே வல்லாளன்
மன்னிய நல்லறமே மாநிலத்தில்-துன்னும்
அரும்பே றெனவே யகங்கொண்டான் பாரோர்
பெரும்பே றெனக்கொள் பிரான்.

அறஞ்செயல்.

ஆசிரியம்.

(49) கருணையங் கடல்வா ழருணையம் பதியில்
பொருணிறைந் தோங்கும் புரவல னாகிய
நல்லார் புகழும் வல்லாள ராஜன்
இல்லா தவராம் ஏழைமாந் தர்க்கும்
5 கைகா லிழந்தோர் கண்ணிழந் தோர்க்கும்
மெய்தான் மெலிந்து விருத்தரா னோர்க்கும்
ஆதர வின்றிவந் தடைந்தோர் தமக்கும்
மாதரை யிழந்து மணம்புரி வோர்க்கும்
நோய்கொண் டிருந்த நடங்குட லோர்க்கும்
10 தாய்தவிர்ந் தலையுஞ் சேய்களா னோர்க்கும்
கல்வியை விரும்பிக் கற்போர் தமக்கும்
பல்வகை யல்லற் படுவோர் தமக்கும்

பவமற முயலுஞ் சிவனடி யார்க்கும்
தவநெறி சாருஞ் சற்குணர் தமக்கும்
15 வேண்டிய பொருளைக் காண்டக வளித்தே
ஈண்டிய புகழோ டிம்மையு மறுமையும்
அடையவேண் டியநல மடைவான் வாயிலின்
புடையொரு கொடியைப் பொற்புறக் கட்டி
முரசறைந் துலக முழுதும்
20 பரசிட வாழ்ந்தனன் பரன்றாள் பணிந்தே.

(50) வன்னக் கொடியாய் வயங்கவே வல்லாளன்
அன்னக் கொடிகட்டி யன்புடனே-துன்னும்
இரவலர்கள் போற்ற வினிதீந்து கொண்டான்
புரவலர்கள் போற்றும் புகழ்.

(51) தென்னருணை மன்னன் செயுந்தருமந் தான்கேட்டே
மன்னுகின்ற பாரின் மனிதரெலாந்-துன்னிப்
புகழ்ந்தார்வங் கொண்டங்குப் போவார் வருவார்
திகழ்ந்தார்வம் பின்றியே சேர்ந்து.

(52) கையலரைக் கொண்டு கவினுர் கனகத்தேன்
பெய்ய விரவலராம் பேணுசுரும்-புய்யவே
வீழ்ந்தோடி யுண்ண விளங்கினன் மேவார்கள்
தாழ்ந்தோ டிடச்செய்வான் றான்.

(53) வறுமையாம் வெய்யிலிலே வாட்டமுற்று வந்தோர்
சிறுமைதீர்க் குஞ்சீத நீழற்-பெறுதருப்போல்
நின்றிலகி னனந் நிலவேந்த னீளருணைக்
குன்றிலகு மாநகரிற் கொண்டு.

(54) கோடைநாட் டாகமே கொண்டுழன்றோர் கூடுகுளிர்
ஓடைநீர் கண்டுண்ண வோடுதல்போல்-கேடில்சனம்

சீர்மன்ன வாழரசற் றேடிவந்து சேர்ந்துவப்பார்
பேர்மன்ன னீந்தபொருள் பெற்று.

(55) ஆலஞ்சேர் கண்ட ருணைப் பதிக்கரசன்
ஞாலஞ்சேர் நற்றரும நாடியே—கோலஞ்சேர்
தேனுர் மொழியார் திறலா டவர்சிறுவர்
ஆனுர் மொழிவதறை வாம்.

(56) கந்தலையே சுற்றிக் கவினங்கந் தோன்றிடநான்
வந்தமுகத் தேதுன்பம் வாய்த்தகுறி—தந்தென்
முகநோக்கு மாதே மொழியருணை சேர்ந்தால்
அகநோக்கு மானந்த மாம்.

(57) சோறின்றி வாட்டமுறுந் தோகையே யென்மக்காள்
ஊறின்றித் தென்னருணை யொன்றினேம்—வேறின்றி
வந்தவர்கட் கெல்லாம் வழங்குமே வல்லாளன்
நொந்தவர்கட் கில்லைபசி நோய்.

(58) தின்பண்டம் வேறு சிறுவர் தினக்கண்டே
என்பக்கல் வந்தேங்கு மென்மதலாய்—துன்பகல
வல்லாளன் வாழருணை வல்லேசெல் வேனுனக்கிங்
கெல்லாம்வாங் கித்தருவே னின்று.

(59) வல்லாள வள்ளல் வழங்காடை பூணணிந்த
இல்லா ளிவள்மைந்த னிங்கிவனே—பல்லாண்டு
வாழ்கவே மாமன்னன் என்றே மகிழ்ந்துரைப்பார்
மாழ்கவே நைந்துவந்த வர்.

(60) இன்றுணையுந் தானு மிருந்தோர் மறையவன்றான்
நன்றுணைநான் வேட்டணைய நல்வேந்தற்—சென்றிரந்
கைந்நிறைய வாரிக் கனக மழைபெய்தான் [தேன்
மைந்நிறைகண் ணாயென்றான் வாழ்ந்து.

(61) ஒப்பாரி லாவரச னேங்கருணை சென்றக்கால்
அப்பாரீ வாங்கி யளிப்பாயே—துப்பான
நல்லுணவு நல்லுடையு மென்றான் நவில்சிறுவன்
புல்லுணவுன் டந்தையிடம் போய்.

(62) நான்பெற்றேன் வல்லாளன் நல்கிடவிந் நல்லணிகள்
வான்பெற்ற மாமணிகள் மாண்பாறு—கோன்பெற்ற
நற்பொருள்கள் யாவுமே நல்கூர்ந்தார்க் கென்றுவைத்
பொற்பொருள்கள் வையான் புவி. [தான்

(63) புலவரெலாம் வந்தே புகழ்மாலை பாட
வலவரலார் வாழ்த்தி வணங்கத்—தலமீது
எம்மன்ன ரிந்த வெழில்பெற்றா ரென்றிசைப்பார்
தெம்மன்ன ரிங்கோர் தெரிந்து.

(64) வெங்கோப மால்யானை வேந்த னறஞ்செய்து
செங்கோ னடாத்துந் திறங்கண்டார்—பொங்கோகை
பொன்னிலத்தார் கொண்டு புகழ்ந்தே யதிசயித்தார்
எந்நிலத்தா ரொப்பாவ ரென்று.

(65) மாபுரங்கள் மூன்றழிய வாய்முறுவல் செய்தார்க்குக்
கோபுரங்கள் மண்டபங்கள் கொண்டியற்றி-ஆபரணம்
செய்துடையான் பொற்பதமே தேடுபொரு ளொன்றி
வெய்துடையா னல்லாத வேந்து. [ருந்தான்

(66) புரகரனார் பொன்னடிசேர் புண்ணியமெய்த் தொண்ட
அரகரவென் றார்கலியி னார்ப்ப—முரசொலிகள் [ர்
மாறிட் டொலிக்க வயங்கிற்றே வல்லாளன்
வீறிட் டொளிர்நகர மிக்கு.

(67) அகனமர்ந் தீந்து மடைவோர் தமக்கு
முகனமர்ந் தின்சொன் மொழிந்துந்—தகவுடனே

ஒல்லுநெறி யெல்லா முவந்தறமே செய்துவந்து
செல்லுநெறி நின்றான் றெளிந்து.

நாரதர் வருகை.

(68) ஈத்துவக்கு மின்பத்தி னிவ்வா றிவனிருப்ப
வாய்த்த மகதியாழ் மாமுனிவன்—பூத்தபுகழ்
அண்ணா மலையா ரடிபணிந்து வல்லாளன்
கண்ணா ரவைபுக்கான் கண்டு.

(69) வந்தமுனி செந்தா மரையடிகள் தான்பணிந்து
எந்தரமோ நீரிங் கெழுந்தருளல்—முந்தைநாள்
யான்செய் தவமோபின் யாதோ வெனவுரைத்தான்
தேன்செய்த தார்மன்னன் றேர்ந்து.

(70) மற்றதுகேட் டங்கண் வளர்தவத்தோர்க் குள்ளருஞ்
பேற்றுடைய மாதவனும் பேசுவான்—வெற்றி [சீர்
மிகவாழ்வு மேவி விளங்கியொளிர் கென்றே
தகவாழ் வுறமொழிந்தான் றான்.

(71) நாரதரவ் வேந்தனிடு நல்லா சனத்தமர்ந்து
பாரதநாட் டில்வாழ் பலவேந்தர்—பேரவற்றில்
நின்பேர் மிகவே நிகழ்தருமஞ் செய்வதுகேட்
டின்பேர் தரவந்தோ மிங்கு.

(72) என்ன வுரைத்த வெழின்முனிவன் றாள்பணிந்தே
என்ன கரும மியற்றினன்யான்—நன்முனிவர்
வேந்தே யருள்வாய் விளம்பி மகப்பேறின்
றீந்தே யருள்கென் றிரந்து.

(73) முன்னிற்கும் வல்லாளன் நெஞ்சு முகமுங்கண்
டுன்னிக் குறைதீர்க்க வுள்ளொளியாய்—மன்னும்
அருணா சலரா மவரே வருவார்
கருணா சலராவர் காண்.

(74) என்றுரைத்து மாமுனிவ னேகியபி னவ்வேந்தன்
நன்றுரைத்தா ரென்றே நலிவகற்றி—நின்றுதான்
செய்தருமம் மாறுது செய்திருந்தான் சீரருணை
யெய்தருமம் மானருளி னேய்ந்து.

(75) ஏகிய நாரதரு மீசன் கயிலாசம்
ஆகிய வெள்ளி யணிவரையில்—தோகையிடங்
கொண்டிருக்குங் கோமான் குரைகழலைக் கும்பிட்டுக்
கண்டிருக்குங் கூறிக் களித்து.

(76) ஈசனே தேனு ரிதழி யணிகைலை
வாசனே சேவடிகள் வாழ்கவெனப்—பேசி
அருணைப் பதிவா ழரசன் கருத்தைக்
கருணைப் பதிக்குக் கரைந்து.

(77) இச்சைவழிச் சென்று ரியனு ரதர்பின்பு
பச்சைமயில் பாகன்றன் பாதங்கள்—நச்சும்
அளகைப் பதிவா ழருங்குபே ரற்கூஉய்ப்
பளகைப் பதியாமற் பார்த்து.

(78) நம்மருணை மாநகரில் நல்லடியான் வல்லாளன்
எம்மருங்குந் தன்ம மியற்றினன்—செம்மை
வருமந்த வேந்தன்றன் வாழிடமீ வாவென்
றருமந்த வேந்தற் கறைந்து.

சிவனுர் வருகை.

(79) அங்கணனுர் பின்ன ரருகணைந்தங் கேவல்புரி
தங்கணநா தர்க்குந் தனிச்சாற்றிப்—பங்கின்
மலைமா தறியா வகைவந்தார் பாரிற்
றலைமா தவரென்று தான்.

(80) சிவகணங்க ளெல்லாஞ் சிவனுரைச் சூழத்
தவகணங்க ளாகியே சார—அவகுணங்கள்

கொள்ளாத வண்ணலாங் கோனகரை நோக்கினர்
எள்ளாத வண்ணை மியைந்து.

(81) வெள்ளிமலை நீங்கி வினைகடியும் வெண்ணீற்றை
அள்ளிமலை வின்றி யணிந்தடியார்க்-குள்ளிவரோர்
சங்கரனே யென்று தரிசிப்போ ருண்ணினைந்து
தங்கரனேர் கூப்பவந்தார் தான்.

(82) தனதனுந் தோழன் றக்வோடுபின் வந்தே
மனிதனும் வேட மருவி-யனகனடி
வந்திக்குந் தொண்டனய் வந்தான் பொருள்கொண்டு
சிந்திக்குந் தொல்லருணை சேர்ந்து.

(83) வெண்ணீறு பூசி விளங்குமுரு வாற்சிவன்பேர்
உண்ணீர்மை யோடோது மோசையாற்-கண்ணுர்ந்து
பாற்கடலண் ணுமலையின் பால்வருதல் போன்றுளதே
மாற்கடலில் கூட்டம் வரல்.

மாலைக்காலம்.

(84) செங்கதிரோன் மேல்பாற் றிசையணுகி முந்நீரில்
அங்கமிழ்வான் போன்மறைய வந்திவரப்-பொங்கழ
அவ்வரையின் சார லருநிரைக ளாயர்வாய்ச் [லாம்
செவ்வரையின் றீங்குழலாற் சேர்ந்து.

(85) வீடுதொறு மேற்றும் விளக்கொளிகண் டேயந்த
நாடுநிரை தம்மிடங்க ணண்ணினவே-கூடுதொழில்
ஆவணங்கள் பல்லோ ரறையொலிக டாமடங்கத்
தூவணங்கள் தோன்றினவே தொக்கு.

(86) செந்தா மரைகுவியச் சேதாம்பல் வாய்மலர
வந்தார்ந்து மாலை வயங்கிற்றே-தங்கேள்

மணந்தார் முகமு மருவுங் கணவர்த்
தணந்தரர் முகமும்போற் றன்.

(87) விட்புலத்திற் றேன்றி விளங்குகின்ற மீன்கணங்கள்
கட்புலத்தின் முத்துமேற் கட்டியினைப்-பெட்புடனே
தேவர்கோன் செய்த சிறப்பொக்குஞ் சீர்மலையா
மூவர்கோற் கன்பின் முயன்று.

சிவனர் கட்டளை.

(88) மால்விடையான் கூட வருகணங்கட் குற்றுரைப்பான்
எல்வுடைய தாசிகள்வா ழெவ்விடமும்-சால்புடனீர்
சென்றிவ் விராமுழுதும் சேரப்பொன் னீந்திருப்பீர்
நன்றிவ் விடைவிடீர் நன்பு.

(89) தாசிகள்வீ டெங்குந் தடையின்றிப் புக்கிடுங்கால்
ஆசைமொழி யானீ ரகலாதீர்-நேசமுறப்
போமினென்று தோழனுடன் போயாசன் வாழ்தெரு
காமினென்று தோன்றினர் கண்டு. [விற்

(90) அண்ணல் விடுப்ப வருநிதிக்கோன் பொற்குவைகொண்
டெண்ணமி குகணங்க ளேகினர்-நண்ணியமெய்ப்
போகம் பெருகப் புணர்நெஞ் சுடனவிற்
றுகம் பெருகினர்போற் றும்.

(91) மானர் கரத்தார் வளராருணை மாநகரிற்
றேனர் மொழிக்கணிகை மார்தெருவிற்-போனர்
விருப்பார் தனத்துடனே விட்டகண நாதர்
மருப்பார் தனத்தார் மனை.

வேசைய ரியல்பு.

ஆசிரியம்.

(92) இழிந்தோ ருயர்ந்தோ ரிளையோர் மூத்தோர்
அழிந்தோர் பொருளை யடைந்தோர் மூடர்
யாவரே யாயினு மேவவந் தற்றால்
தாவறு கைப்பொருள் தாம்பறிப் பவராம்
5 வேல்விழி வேசையர் வீசிய வலையில்
பால்வழிப் போய்விழும் பயனிலா மாக்களில்
ஒருவர் சயனத் துறமற் றொருவர்
மருவித் தழுவ வாயுரை செய்ய
வேறொரு மனிதர் கூறுடை யறையில்
10 மாறிலா வேளை வரவுபார்த் திருக்கப்
பின்னொரு மனிதர் கொன்புறத் தலவ
மன்னிடை கழியில் வந்தோர் நிற்கக்
கடைத்தலைப் பலபேர் கண்ணுற் றுழலப்
படைக்கணார் யார்க்கும் பாங்கொத் தவராய்த்
15 தலைக்குறி கைக்குறி தங்கட் குறிகள்
அலைப்புறு சொற்குறி யவரவர்க் கேற்ப
ஒத்தவர் போலச் சித்த மயக்கி
வைத்துள பொருள்கள் வாங்குற வழங்கித்
தனவிலை பகருந் தையலார் காமன்
20 மனமுமங் குருக வனப்பமை மேனி
மினுக்கிக் குலுக்கி வியனடை மேவி
அனுக்கங் கொண்டோ ரடையப் புடைபெயர்ந்
தின்முகங் காட்டி யெழினுரை யியம்பி
வன்மன மடவார் வாசங் கமழ

வாயிலி னின்று வகைசெய்
26 மாயம் புரிதெரு வயங்கிடு மாதோ.

(93) தாய்க்கிழவி சொல்லுந் தளுக்குமொழி யாலங்கே[மனை
வாய்க்கவந்தோர் மீண்டுந்தம் வாழ்மனையிற்-போய்த்த
தேடாம லேற்றவரைத் தித்திக்கும் வார்த்தைகளால்
ஓடாம லேற்றுவா ருள்.

வேசையர் மனை.

(94) அளகேச னூர்பொருள்கொண் டக்கணிகை மார்வாழ்
வளமேவு மாளிகைகள் மன்ன-உளமேவி
நோக்கச் சுதைபூசு நுண்சுவரின் மேற்கோலம்
பூக்கச் சுகந்தருமே பொற்பு.

(95) ஐங்கணைவேள் செய்யு மருவே தனையகற்றத்
தங்குமட வாரிடையிற் றுமணிந்த-பொங்கு
மொளிமே கலைபற்றி யுள்ளழியு மாண்மை
களிமேவு சித்திரத்திற் கண்டு.

(96) செம்பவள வாய்முத்தஞ் சேயிழையார்சேர்ந்தோர்க்கு
நம்பவள வாய்க்கொடுத்து நாண்கொள்வார்-கொம்பெ
திற்குமொரு பேதைவிழி நீளம்பு பாய்வதற்குஞ்[னவே
சொற்கு மொரு பேதைவிழுஞ் சோர்ந்து.

(97) ஒருகொங்கை யோர்கை குழைப்பவொரு செங்கை
உருவம் பொருந்தமுது குற்று-மருவிதழ்ச்செவ்
வாம்பல்வாய் வைத்துச் சுவைப்ப வமையுருவை
எம்பல்வாய்ப் பக்கண்டா ரீங்கு.

(98) கிடந்து மிருந்துங் கிளர்ந்தெழுந்து நின்றும்
உடன்புணரு மாண்பெண் ணுருவை-விடங்கலந்த
கண்ணினர் மாளிகையிற் கண்டு மயல்கொண்டு
நண்ணினர் மாதர்பா னன்பு.

### சிவகணங்கள் செயல்.

(99) வாசங் கமழ்மேனி மாத ரிரவெல்லாம்
நேசங் கலந்தணைய நேர்ந்திடுபொன்—பேசி
உறுதிமொழி பெற்றே யுவந்தீந்தார் பொன்னை
அறுதிமொழி வாராம லாய்ந்து.

(100)வாங்கினர் கைந்நிறைய மாண்பொன்னை மான்விழியார்
ஓங்கின ருள்ளுவகை யுற்றாராய்த்—தாங்கற்ற
காமக் கலைவிரித்துக் காட்டிமகிழ் வூட்டினர்
தாமக் கலையரையார் சார்ந்து.

(101)ஊடியுங் கூடியு முள்ளூறத் தெள்ளூறல்
பீடினளித் தின்பம் பெருக்கினர்—நாடி
இரும்போகம் பெற்ற இமையவர்போ லானர்
அரும்போகம் பெற்ற வவர்.

(102)தவறில்லை யேனுந் தவறுட் கொளீஇ
மவுனம் பொருந்திடுவார் மைந்தர்—உவகைதரச்
சென்றணைத்தக் கால்விழிநீர் சிந்த வழுதிடுவார்
குன்றணைத்த கொங்கையார் கூர்ந்து.

(103)நீயென்னை விட்டோர் நெடுங்கண்ணாள் தன்னைநினைந்
தாயென்னை யின்னைத் தழுவுதலா—லாயபயன்
போமமரு மின்னாளைப் புல்லீ ரெனவெகுள்வாள்
ஏமமரு மின்னா ளிணைந்து.

(104)கணிகையார் வாழ்மனையிற் காண்டகவிவ் வாறே
அணியார் சிவகணங்க ளார்ந்தார்—மணிகண்டர்
அண்டர்தொழு தேத்து மருணாச லேசரெனுந்
தொண்டர்தொழில் சொல்வாந் தொடர்ந்து.

சிவனுர் அடியாராய் வருதல்.

(105) சடாமகுட ராகித் தகைசேர் செவியில்
விடாமகிழ்செய் தோடு விளங்கத்—தடாருதற்கண்
வெண்பொடியின் மேலே விழைதிலக மிட்டவராய்ப்
பண்பொடிள மூரல் பயின்று.

(106) மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியராய்
உய்யலாம் அக்கமணி யொண்மார்பிற்—பெய்தணியா
தண்டங்க மண்டலங்கை தாங்கித் தனியருளால் [த்
எண்டங்க மண்டலத்தி னேய்ந்து.

(107) அண்ணு மலைவாழ்க வந்நகர்க்கு மன்னவனும்
மண்ணுர்சீர் வல்லாளன் வாழ்கவெனக்—கண்ணுர்ந்த
மாளிகையின் பாற்போய்நம் மாதேவர் சேர்ந்தனர்பூ
வாளிகையின் மாரன்போல் வந்து.

(108) வாயிலைக்காப் பாரந்த மாதவரைக் கண்டரசன்
கோயிலையுற் றெம்முடைய கோமானே—ஆயுள்பல
நூற்ருண்டு வாழ்கவென நோக்கி யுரைசெய்வார்
போற்ருண்டு வாயாற் புகன்று.

(109) கைகட்டி வாய்புதைத்து நின்று கவினரசே
பொய்கட்டா மாதவர்நம் பொற்கோயில்—மெய்கட்டு
நல்வாயில் வந்தே நணுகினு ரென்றிசைத்தார் [ம்
சொல்வாயில் வைத்துத் தொழுது.

(110) நம்பரடி யாரணைந்தா ரென்றுரைக்க நல்வேந்தன்
இம்பரடி யேற்கிதுவே யேற்றமா—கும்பயனென்
றேன்றுமகிழ்ந் தோடி யெதிர்கொண் டடிபணிந்துள்
ளன்றுமகிழ் வுற்ரு னுடன்.

(111) அடிகளார் நீரிங் கடைந்தீ ரதனாற்
பொடிகளா யென்வினைகள் போமே—படியரியீர்
உள்வாரு மென்றங் குவந்தழைத்துச் சென்றனனே
வள்வா ருடைமுரசான் மற்று.

(112) இடிமுரசத் தானையா னெம்மடிக ணீரெங்
குடிமுழுதுங் குற்றேவல் கொள்வீர்—கடிமனையில்
வீற்றிருக்க வென்றே விரும்பிவந்த தென்னென்றான்
மாற்றிருக்கும் பொன்போன் மதித்து.

(113) அன்பனே தொண்டர்க் கடியனே பாராளும்
முன்பனே நீசொன் மொழியதனால்—என்புருகி
நிற்பே மிவணீ நெடிதியற்று நல்லறந்தான்
பொற்பே மிகுமாற் பொலிந்து.

(114) வேண்டிய யாவும் விமல னடியார்க்குக்
காண்டகநீ யீயுங் கவின்கேட்டே—ஈண்டி
வருமா தரவாலே வந்தோநின் பாலே
ஒருமாத ரன்பினையே யுற்று.

(115) வாமதே வன்பாலே மாமனைஞ் சிருந்ததைக்
காமதே வன்களவாற் கைப்பற்ற—ஏம
முறவந்த நோய்நீக் குபாய மறிந்தே
பெறவந்த தானாம் பெயர்ந்து.

(116) என்றுரைத்தப் பாலுரைத்த ஈச னடியாரை
நன்றுகுறித் திரிதனை நான்றீர்ப்பேன்—வென்றிமதன்
முன்பொடியாக் கண்விழித்த முன்னோனை யன்னோய்
கண்பொடியாக் காரிகையி னால். [நிற்

(117) மாதவர்நீர் கொண்ட மயல்தீர நன்மங்கை
கோதறவே தேடிக் கொடுவந்திங்—காதரவாய்க்

கல்யாண மொன்று கடிதின்முடிப் பேனென்றான்
நல்யானை யொன்ற நயந்து.

(118) கடிமணஞ்செய் வேனென்ற காவலற்கு முன்னே
அடியவர்சொல் வார்நல் லரசே—படியதனில்
மாமணங்கொள் தொல்லை மருவே னெனவுரைத்தார்
தாமணங்கொள் தார்வேந்தற் சூழ்ந்து.

(119) கேட்ட வரசன் கிளத்துவான் நீர்கொண்ட
வாட்டமறச் செய்யும் வகைபெரிதன்—றேற்ற
மருவார் கருங்கூந்தன் மாதைநம தாள்கள்
தருவார் கருத்தமரத் தான்.

(120) நீரிங் கிருமென்று நேரா சனத்திருத்தி
ஏரிங் கிதங்கொண்டா ரின்பமுறச்—சீரியைந்த
மங்கையரின் மேதக்க மாணிழைகொ ணல்வனசக்
கொங்கையரின் மேவக் குறித்து.

(121) ஏவலரைக் கூஉய்நீ ரிருங்கணிகை மாரிடம்போய்
மேவவொரு மாதை விரைந்தழைத்து—நோவகலக்
கொண்டுவரு வீராக வென்றான் குறிப்புரைத்துத்
தொண்டுவரு நெஞ்சன் றொடர்ந்து.

(122) சென்றார் கணிகையர்கள் சேரிடமெ லாமோடி
நன்றாக வோர்மாதர் நல்னுவிரேல்—குன்றாத
பொன்னேர் தரவே பொருந்திவாழ் வீரென்றார்
மின்னே ரிடையார்க்கு விண்டு.

(123) காவலனார் கூவினார் கைந்நிறையப் பொன்னீவார்
ஆவலுடன் வாரீ ரெனவழைப்ப—மாவடுநேர்
கண்ணினார் சொல்வார் கருதிவரு மிவ்விரவில்
நண்ணினார் செல்வரென்றார் நன்கு.

(124) வஞ்சக் கணிகையரு மாதேவர் தஞ்செயலால்
நெஞ்சக் கலக நினையாமல்—விஞ்சுறவே
இற்றையிர வானு லிசையா திசையுமென்றார்
மற்றையிர வானல் வர.

(125) எனவே கணிகையரு மேற்றபடி சொல்ல
மனவே தனைகொண்டு மற்றோர்—தனவிலையார்
வாழ்கின்ற வீதியிற்போய் மன்னவனார் சொன்னவ
சூழ்கின்ற ஆள்கள் சொல. [ணம்

(126) கேட்டந்த மானார் கிளத்துவா ரிவ்விரவு
வாட்டந் தவிரவரு மாணடியார்—நீட்டியகைப்
பொன்னிறையத் தந்தார் புகல்சத்தி யஞ்செய்தேம்
மன்னிறைவற் கென்சொல்கே மற்று.

(127) மன்னவனார் தாளை வணங்கி மொழிகின்றோம்
பின்னிரவு யாங்கள் பிழையாமல்—சொன்னபடி
செய்யத் தடையில்லை யென்றென்றே செப்பிடுவார்
ஐயத் தடையாம லன்று.

(128) ஒருவருமே வாரா வுறுதிதனைக் கண்டு
தெருமரலுற் றேவலர்கள் சென்றே—புரவலற்குப்
பூங்கொடியார் சொன்ன பொருள்கூறக் கேட்டரச
ருங்கொடியார் என்றே தளர்ந்து. [ன்

(129) பின்னருகே நின்ற பெருமைசேர் மந்திரியைத்
தன்னருகே வைத்தோர் தளிரியலாள்—மன்னியவோ
மெய்த்தவர்க்குக் காம விரககற்ற நீகொடுவ [ர்
துய்த்தவர்க்குக் காம மொழி.

(130) என்றுரைக்க நல்லமைச்ச னேகிக் கணிகையர்க்கு
மன்றரப்பல் பூஷணமும் மாளிகையுந்-துன்றியபொற்

பட்டா டையுநிலமும் பாங்காய்ப் பெறுவிர்வரிற்
கட்டாய மென்ருன் கலந்து.

(131) அப்போது மந்த வருணைநகர் வீதியில்வாழ்
செப்போது மாமுலேயார் செப்புவார்—துப்போடும்
ஆர்வந்து சொன்னலு மாகா தினிநாளே
நேர்வந்து கேட்போ நினைவு.

(132) எனமறுக்கக் கேட்டினிநா மென்செய்கே மென்றே
மனமறுக்க மாய்மீண்டு வந்தே—சினவேலான்
முன்கூறு வானுய் மொழிக டடையுற்றே
என்கூறு வாமென் றிருந்து.

(133) அறமே துணையா வகத்தென்னு மன்னுல்
உறவே யெளிதாகு மொன்று—பெறலரிதாம்
இக்கா ரணங்காண வெண்ணே லிதுவினையே
தக்கா ரணங்கார் தளர்ந்து.

(134) மந்திரியிவ் வாறுசொல மாமன்ன னெண்ணிடுவான்
இந்தவினை யென்னே யெனக்கரிதாய்—வந்துற்ற
தொன்றுமிடை யூறகற்றி யொல்லும் வகைசெய்தல்
நன்றுமிடை தொல்லோர் நடை.

(135) மாதவர்க்குச் சொன்ன வகைமுடியா மற்போனுற்
றீதகற்ற நல்லறநான் செய்வதென்னே—கோதகற்றி
நானடைந்தம் மானுரை நாடுவே னென்றகன்ருன்
தேனடைந்த சொல்லார் தெரு.

வல்லாளன் வேசையர்வீதியில் செல்லல்.

(136) வல்லாள மாவேந்தன் மாணிழையார் தம்வீதி
எல்லார் மணிப்பூ ணிலங்காரம்—வில்லார்ந்து

நற்பகலாய்த் தோன்ற நணுகினன் கங்குறனிற்
பொற்பகலா தோங்கு புரி.

(137). தாசிகள்வாழ் வீதி தனிலே தரணிபனும்
நேசமுற வந்தா னெனநினையாப்—பாசிழையார்
ஈங்கெம்மை நாடிவரற் கென்னேது வென்றெணுவா
நிங்கெம்மை யுஞ்சேராற் சேர்ந்து. [ர்

(138) வாழ்கவே நல்லறஞ்செய் மன்னவனார் பொன்னடி
ரூழ்கருத்தி னேடங் கவனடியிற்—ரூழ்வகல [யென்
நல்வணக்கஞ் செய்தே நவிலாணை யென்னென்று
சொல்வணக்கஞ் செய்தார் தொழுது.

(139) கோடியிடையீர் நீவிர் குளிரிவ் விரவில்
அடியவராஞ் சங்கமர்த மாசை—முடிவுறவே
சேர்ந்திருக்க வந்தீரேற் செம்பொன்பத் தாயிரமும்
சூர்ந்திருக்க வீவேன் குறித்து.

(140) என்று னரசனவ் வேந்திழையா ரெம்வேந்தே
நின்ருள் பணிந்தோ நிகழிரவில்—ஒன்ருது
நாளைவரற் காமென்று சொன்ஞர் நரபதிக்கிவ்
வேளைவரற் கில்லெனவுள் வேர்த்து.

(141) அரசன் பகர்வா னணியிழையி ரின்றே
வரவென் ருடனிசைந்தார் மன்ஞேர்—பரசிடவே
என்னரசிற் பாதி யியைந்தடைவ ரென்றுரைத்தான்
மன்னரசிற் காதல்செயா மன்.

(142) ஆணையிட்டுப் பொன்பெற் றகலா வகையிருந்தோம்
நாணைவிட்ட நாயேங்கள் நல்வேந்தே—மாணரனார்
தஞ்செயலென் றெண்ணித் தளர்வேமிங் கென்செய்
வெஞ்செயலென் றும்பொறுப்பாய் மேல். [கோம்

(143) விலைமாத ரிந்த விதங்கூறக் கேட்ட
தலைமா நிருபன் றனது—நிலைமாண்பிற்
சொல்ல வரும்பெரியோர் சோகந் துடைத்தனவோ
நல்லவரும் பேறுறுவார் நன்கு. [ர்

(144) என்னரசு மென்பதமு மெல்லாமுங் கைக்கொள்வர்
பின்னவர்க ளென்பணியும் பெற்றிடுவர்—துன்ன
வருமாத ராரிலையோ மாணிழையீ ரென்றான்
றிருமா தராபதிதான் றேர்ந்து.

(145) பலவா றரசன் பகர்ந்திடவுந் தங்கள்
குலவாசை விட்டுக் கொடியார்—இடைமடவார்
வாளா விருக்கை தனையுன்னி மாழ்கிவந்து
கேளா விருக்கை கிடந்து.

வல்லாளன் மனக்கலக்கம்.

ஆசிரியம்.

(146) சோர்ந்திடு மிறைவ னோர்ந்தினு பெருமான்
கூர்ந்தடி யார்கள் குறைமுஞ் செயலுந்
தொண்டி னுறைப்புந் தோன்றிட வுலகோர்
கண்டிடும் வண்ணங் காட்டிடுங் கருணைபோல்
5 எளியேன் செய்கையை யீசனே யெண்ணி
அளியாற் சோதனை யமைத்ததோ விலதெனு
நெஞ்சம் பலபல நினைவுற் றிருந்து
வஞ்சம் பற்றிய மனத்தின னல்லேன்
அருணையில் வாழுங் கருணாமா மலையே
10 தெருணிறை யாத சிந்தையேற் காத்துன்
சேவடிக் காட்செய் திறமரு ளெந்தாய்
பாவமெய் தாத படியருள் பரனே

உன்செய லெல்லா முதவிச் செயலே
என்செய லெல்லா மிடர்மிகுஞ் செயலே
15 ஆதலி னடியே னறம்புரி வதற்குக்
காதலித் தேனது கடைபோம் படியே
செய்தரு ளாயெனி னுய்திற மிலையே
பெய்பலி யேற்றுப் பெருவிளை யாடல்செய்
கண்மூன் றுடைய கடவுளே போற்றி
20 எண்மூன் றுலகமு மேத்திட நின்ற
எம்பெரு மானே யிணையடி போற்றி
உம்பர்கட் கரசா மொருவனே போற்றி
நன்மையுந் தீமையு நானறி யேனின்
றன்மையு மறியேன் சங்கரா போற்றி
25 வெந்துயர் நெஞ்ச மிகவே யுழல்வேன்
றந்தையுந் தாயுநீ தற்பரா போற்றி
அல்லல் மிகாம லாண்டருள் புரிவாய்
தொல்லுல கினுக்கோர் சுடரே போற்றி
சொல்லுவ தறியே னின்றன்
30 மெல்லடி மலரே போற்றினன் விரைந்தே.

(147) என்னத் துதிசெய்தே யெம்பெருமான்செம்பொனடி
மன்னக் கருத்தில்வைத்தென் வார்த்தைதனக்—கின்
பழுதுவரி லாவி பரியே னெனவே [னே
தொழுதுபரி யங்கத்திற் சோர்ந்து.

(148) நெஞ்சு முகமு நிலையழிந்து நீளணையில்
வஞ்சவலைப் பட்ட மடங்கலெனத்—தஞ்சமுறச்
சாய்ந்தே கிடந்தான் றனியறஞ்செய் வல்லாளன்
மாய்ந்தே கிடந்தான்போல் வந்து.

(149) நீளிரவி லுண்கின்ற நேரந் தவிரத்தங்
கேளிறைவன் சோர்ந்த நிலைகண்டார்—தாளிணைக்
மானுர் விழிமடவார் மாதேவி யார்வந்து [கீழ்
கோனுர் விழிப்பக் குறித்து.

(150) என்று மடையாத எக்கத் துடன்சோர்ந்தீர்
பொன்றுஞ்சு மார்பிற் புரவலரே—நின்றெஞ்சும்
எவ்வினைவந் துற்ற திறையே யிறைதாரீர்
வெவ்வினைவந் தாற்போமோ விட்டு.

(151) காமர் மலர்க்கரத்தாற் காதலனைக் கட்டியெடுத்
தேமமரு மின்சொ லியம்பினுர்—தாமமலர்த்
தேனெழுகு மார்பன்றன் றேவியர்க்குச் செப்பிடுவா
வானெழுகு மாகீர்த்தி வாய்த்து. [ன்

(152) இன்றுவந்த சங்கமர்த மிச்சை முடிப்பதற்கு
மன்றல்வருங் கூந்தன் மடவாரில்—நன்றொருபெண்
வாய்க்கவலை யின்றியே வாரா ளிதுமனத்தில்
நோய்க்கவலை யென்று னுனித்து.

(153) போதுமகளிர் சொன்ன பொருள்விரித்துக் கூறி
இதுமனத்தி னோர்ந்ததிவ னென்ன—மதுவிரித்த
பூங்குழலார் தம்மிற் புகழ்சல்ல மாதேவி
தீங்குழலா னெஞ்சிற் றெரிந்து.

சல்லாமாதேவி செயல்.

(154) என்காத லென்னிறைவ னெண்ணிச் செயுந்தருமம்
நன்காதற் கேற்றதுணை நானிருப்பேன்-என்கேள்வர்
செய்திறத்தி லூறு செறியி னுயிர்வாழார்
உய்திறத்தை நாடுவே னுற்று.

(155) புத்திரப்பே றின்றிப் புகழ்தருமஞ் செய்கின்றார்
எத்திறத்து மேற்பவர்கட் கில்லையெனார்-வைத்தமயல்
நெஞ்சுற்ற சங்கமர்க்கோர் நேரிழையா ளிந்நகரில்
எஞ்சுற்ற காரணந்தா னென்.

(156) மஞ்சனைய பூங்குழலார் வான்பொருள்பெற் றானுட
வஞ்சனையால் விற்பாரும் வந்திலரே-நஞ்சடைந்த[லை
கந்தரத்தார் சோதனைபோற் காணு மிதற்கழிந்தால்
அந்தரத்தார் தாமதியா ரால்.

(157) நாறும்புன் றேலுடலை நான்றுங்க நாயகனார்
பேறுபெறு சொற்றவறிப் பேதுற்றே-ஈறுற்றால்
என்செய்கே னிவ்விடர்தா னென்று லகன்றிட்டால்
மண்செய்கே டில்லையா மற்று.

(158) ஈசனார் காத்திடுவ ரென்கற்பை யித்தருணங்
கூசநான் வீணிருந்தாற் கொள்பயனென்-நேசனார்
தங்கருத்தை நாடித் தமியே னறிவேனென்
றங்கருத்தி கொண்டா ளவள்.

(159) பின்பரசன் கொண்ட பெருங்கவலை தானீக்க
முன்பனுகிக் கூறுவாள் மூதுரைவால்-தன்பகல
இத்தருணம் பேதையேற் கோர்கருத்திங் கெய்தியது
வைத்தருணங் கேதம் மறந்து. [ள்

(160) கற்புடைய மாதர் கணவனையே தெய்வமெனப்
பொற்புடனே யெண்ணல் புதிதன்று-மற்பொலியுந்
திண்புயமார் வேந்தே திருவுளநீர் பற்றுவிரேல்
நண்புயமார்க் கங்கொள்வே னன்.

(161) ஓடியாப் பெரியோர்த முட்கவலை தீர்க்க
அடியாள் பணியா லடைவேன்-விடைதருக

என்று தரவாற் கனவனிடர்க் கேன்றுரைத்தாள்
குன்றுத சீர்கொள் கொடி.

(162) சங்கமர்த மெண்ணந் தகமுடிப்ப தேகினவா
அங்கமர்நன் னெஞ்சத் தருளரசன்–பொங்குதுயர்
நோய்கண்டார் மற்றந்த நோய்நீர் மருந்தைத்தம்
வாய்கண்டா ரென்ன மகிழ்ந்து.

(163) சம்மதத்தை வாயினுற் சாற்றுமற் சாற்றியபின்
அம்மன்னன் பேருவகை யார்சொல்வார்–செம்மனத்
நற்றேவி யக்கணமே நம்பரடி யார்மகிழ்வு [து
பெற்றே வியக்கப் பெயர்ந்து.

(164) நீராடி வாசநறு நெய்பூசிக் கூந்தன்மலர்
ஏராரச் சூடியே யேமவுடை–பேரார்
மலர்வாளி வேளு மனமருளக் கட்டி
அலர்வா ளிருதயத்தி னுய்ந்து.

(165) உலகம் விலைபோகு மொள்ளணிகள் பூண்டு
கலகம் விளைக்கவிழிக் கண்மை–திலகநுதல்
அங்கையில் வீணை யமைத்தே யருமனத்தில்
சங்கையில் எண்ணந் தரித்து.

(166) நற்சங் கமரிருக்கை நாடிச்சென் றெய்தியவர்
முற்சந் திரன்போன் முகங்காட்டிச்–சொற்றேன்
குமுதவாய் சிந்தக் குழறித் தொழுதாள்
அமுதவாய் வான்சே ரணங்கு.

(167) கண்டத்தி னுலங் கரந்தவரங் கேதுயிலக்
கண்டத் திருவுங் கவின்வீணை–கொண்டே
நசையா ரிசைபாடி நற்காம முள்ளே
இசையா ரிசைய விருந்து.

(168) பார்த்தா ளுமைபங்கர் பாரார் துயிலவுளம் [கு
வேர்த்தாள் பொழுது விடிவதன்முன்—சேர்த்திவர்க்
மெய்விருப்பந் தீர்ப்பனென்ன வெண்ணி விளங்கிழை
பொய்விருப்பர்த் தீண்டினள் போய். [யாள்

சிவபெருமான் மகனாகுதல்.

(169) தீண்டித் தழுவவந்தத் தேவிகையி லெய்தாமல்
ஈண்டித் தனிமகவா யெம்மீசன்—வேண்டியபால்
இல்லாம லேயழல்போ லின்பரியங் கந்தனிலே
நில்லாம லேயழுதா னேர்.

(170) வடமீனி னுஞ்சிறந்த மாதேவி கண்டே
தொடமே லெழுமுவகை தோன்றத்—திடமகவின்
கண்ணா ரணங்கு கருதி யதிசயித்தாள்
பெண்ணா ரணங்கு பெரிது.

(171) காந்தளங் கையிற் கவின்மகவைக் காதலுடன்
ஏந்தித்தன் ஏந்தற் கியம்பவே—வேந்தனவன்
என்னே வியப்பிவ் விளங்குழவி யீசனருள்
மன்னே வியப்பிறப்போ மற்று.

(172) கண்ணார் நுதலண்ணல் கார்விடமுண் கண்டத்தெம்
அண்ணா மலையா ரருளிதுவோ—விண்ணாடர்
போற்றும் புனிதர் பொலங்கழலே யென்னிடர்கள்
மாற்றும் புனித மருந்து.

(173) ஈச னளித்த விளங்குழவி யீதோவென்
றாசை யகத்தடங்கா வண்ணலவன்—பேசுபுகழ்ச்
சல்லமா தேவி தாவே கரமேற்றான்
மெல்லமா தேவிடென விண்டு.

(174) வாங்கிமுத்தங் கொண்முன் மதலை மறைந்திடலும்
எங்கிமுத்தி பெற்றேரி ழந்ததனைத்—திங்குறல்போல்
ஆற்று விடாரா மரனே யடியேற்கு
மாற்று விடலாமோ வந்து.

(175) என்றங் கிரங்கு மிறையவன்றன் கண்முன்னே
நின்றங் கருளிறைவ னேர்வந்து—குன்றமகள்
பால்விளங்கப் புன்முறுவல் பற்றிவரு மால்விடையின்
மேல்விளங்கத் தோன்றினுன் விண்.

(176) கண்டானே யெம்மான் கருணைத் திருவுருவைத்
தொண்டான வல்லாளன் சொல்லரிய-கொண்டாடல்
பற்றியெனை யாளப் பரனே யெளிவந்த
வெற்றியெனை யாவென்று மேல்.

வல்லாளன் துதித்தல்.

(177) அருணை மலையே யருமலையே மேலாங்
கருணை மலையே கடையேன்—பருவரலைப்
போக்கு மலையே புகழ்மலையே யின்படியேற்
காக்குமலை யேயென்னை யாள்.

(178) திருமணியே தேவர்க்குந் தேவா மணியே
குருமணியே பேரொளியே கூடும்—அருமணியே
விண்மணியே யென்னை விடாமணியே நாயேற்குக்
கண்மணியே நீயென்னைக் கா.

(179) எல்லொளியே யெங்கு மிலகொளியே யெண்ணிறந்த
நல்லொளியேமெய்யன்பர்காடொளியே-தொல்கைலை
வாழொளியே யென்றன் மனக்கவலை நீக்கொளியே
சூழொளியே நின்றருள் துணை.

(180) இவ்வண்ணஞ் சொல்லி யிறைஞ்சு மிறைவற்குச்
செவ்வண்ண மெய்கொள் சிவபெருமான்—எவ்வமற
நல்வாய் மலர்ந்து நவில்வா னலமுடனே
செல்வாய் மலங்கலறத் தேர்.

(181) நற்புதல்வன் வேண்டுமென நாடியிருந் தாயுனக்குப்
பொற்புதல்வ னென்னநாம் போந்தனமே-சொற்பய
தென்ன வினிதே யறமியற்றி யிப்புவியில் [னீ
மன்னவினி வாழ்வாய் மகிழ்ந்து.

(182) மைந்தனிலை யென்ற மனக்கவலை தீர்ந்திடுவாய்
அந்தமுறி லென்ற னடியடைவாய்—வந்துனக்கு
நாமுத் தரகிரியை நன்கியற்று வோமென்றான்
மாமுத்த ரன்பில்வரு வான்.

(183) இன்னமுதுவார்ந்ததுவேயென்னமுதுவாய்மலர்ந்து
சொன்னமொழி கேட்டுத் துயரகன்றான்-மன்னழகு
வாய்த்தமதுக் கொன்றையான் வான்மறையக் கோ
போய்த்தமது மாளிகையிற் புக்கு. [ன்முறையான்

(184) வந்தளித்த தும்பெருமான் வான்மறைந்து போன
[துவுஞ்
சிந்தைவைத்தின் புந்துன்புஞ் சேர்ந்தானே-கந்திறுத்
வெல்லுங் கடகளிற்று வேந்தன்ற னல்லமளி [து
ஒல்லுங் கடனிதுவென் றுற்று.

பொழுது விடிதல்.

(185) சங்குலா முன்கையார் தங்கள் துணைபிரிந்தார்
கங்குலாம் வெள்ளங் கனைகடலிற்—பொங்கும்
பனிக்குமுள மென்பார் படர்தீரக் கோழி
தனிக்குரலாற் கூவிற்றே தான்.

(186) காகங் கரைந்து கனையிருளுங் கால்வாங்கி
மேகந் திரிவிசும்பும் வெள்ளெனவே—மாகடல்வாய்ச்
செங்கிரணங் காட்டித் தினகரன்வந் தான்மானூர்
தங்கிரண முள்ளகலத் தான்.

(187) புதுவிரைகொள் கஞ்சம் புனற்றடத்திற் பூத்த
மதுவிரைகொள் வண்டினிசை மல்க—விதுதொழற்கா
நல்வேளை யென்றடியார் நண்ணித் துதிசெய்வார் [ம்
வில்வேளை வென்றவர்தாள் வீழ்ந்து.

(188) கோயிலிற்சங்கொலியுங்கோமகன்றன்பொன்மனையின்
வாயின் முரசொலியும் வாழ்த்தொலியும்—போயிசைப்
விண் ணுலாங் கீர்த்தி மிகுவேந்தன் கண்விழியா [ப
எண் ணுலா நெஞ்சத் தெழுந்து

(189) முன்னைச்செய் நல்லறமே மூதுணர்வாற் றுன்புரிந்து
தன்னைச் சிவபெருமான் றுனளித்த—துன்னிமனம்
நாள்கள்செல நம்பன் நலமார் மலர்போன்ற
தாள்கள்செல வின்றியே சார்ந்து.

சிவனாரைப் பூசித்தல்.

(190) வாச மலர்வகைகள் மாண்கந்த வர்க்கங்கள்
பூசனைக்கா கும்பல் பொருள்களிவை—நேசமுடன்
கொண்டுதிருக் கோயில் குறுகிப் பெருமானைக்
கண்டுதிருக் கோலங் களித்து.

(191) ஆகமத்திற் கூறு மருநெறியாற் பூசித்துப்
பாகமுற்ற பச்சைப் பசுங்கொடியை—மாகவினார்
பாத முறத்தொழுது பாடித் துதித்துருகிப்
போத முறத்தொண்டு பூண்டு.

(192) போந்துள் வலமும் புறவலமுஞ் செய்திட்டு
வாய்ந்ததிரு மாளிகையின் வந்திருந்து—நேர்ந்துவரு
மாந்தர்களுக் கன்னம் வரையா தளித்தனனே
வேந்தர்களுக் கெண்ண மிக.

(193) இவ்வாறு பல்லாண் டிருந்தோர் தினநினைந்து
செவ்வாறு செல்லுந் திறல்வேந்தன்—அவ்வாறு
சென்னிவைத்த தேவன் திருவிழாக் கண்டுதொழ
உன்னிவைத்த காத லுற.

வல்லாளன் திருவிழாச் செய்தல்.

(194) மந்திரிகட் கீசன் மகிழ்விழவு கொண்டாட
வந்துதித்த காதல் வகைமொழிய—முந்துமவர்
மேவுந் தழன்மேனி வெண்ணீறு பூசியொளிர்
சேவுந் தழகர்தளி சென்று.

(195) வேண்டிவினை யெல்லாம் விரிவாய்ச் செயவிளம்பித்
தூண்டிவினை யெல்லாந் தொழுதுரைப்பக்—காண்டக
வீதிவல மாமன் விமல ரெழுந்திருந்தார் [வே
நீதிவல மாமன்ன னேர்.

(196) மண்குளிரக் கண்குளிர வாய்குளிர வாழ்த்திடுவார்
எண்குளிர நல்லருணை யீசனார்—பெண்குளிரப்
பாதியிடங் கொண்ட படிவத் துடன்விடைமேல்
வீதியிடங் கொண்டார் விழா.

(197) பல்லியங்க ளார்ப்பப் பரமர்க்கு முன்முறையே [கு
நல்லியல்பாய்ப் பொற்கொடிக ணண்ணிவரக்—கல்விமி
மாண்டக்க நன்மனத்தார் வாழடியார் பல்சனங்கள்
காண்டக்க நன்மாண்பு கண்டு.

(198) நஞ்சுண்டா வென்பாரு நாதனே யென்பாரும்
பஞ்சுண்ட மெல்லடியாள் பாகனே—வஞ்சவினை
தீர்ப்பவனே கண்ணுதலே யென்பாருஞ் சேர்ந்தங்
கூர்ப்பவனே கம்புகல்வார் கொண்டு. [கே

(199) அடைந்தாரைக் காக்கு மமலனே நெஞ்சம்
உடைந்தேமைக் காவென் றுரையா—மிடைந்துருகிக்
காத்திரமே கம்பித்துக் கைகூப்பி நிற்பார்செய்
தோத்திரமே லோங்கத் தொழுது.

(200) துன்பமே நின்னைத் தொழாதநாள் என்பாரும்
இன்பமே நின்றனை யேத்துநாள்—என்பாரும்
ஆதியடி யார்க்குண் டமுதனே யென்பாருஞ்
சோதியடி யார்தொழுவார் சூழ்ந்து.

(201) மண்காட்சி யேகண்டு வாடியிருந் தோமின்றுன்
எண்காட்சி யேகண்டோ மின்புற்றோம்—விண்காட்சி
தந்தாளுஞ் சோணகிரித் தாணுவே கோணகல
வந்தாளு கென்பார் மகிழ்ந்து.

(202) பலவிழவு கண்டோம் பலனில்லை நின்றன்
நலவிழவு கண்டின்ப நண்ணி—யலலறுத்தோம்
நான்மறையின் கீத நவில்வாய் விமலாவெம்
மூன்மறையின் நேர்வந் துதவு.

(203) என்றே பலவா றியம்பி யடிதொழுது
நின்றே பலரு நெடிதேத்த—வென்றிமிகு
தானைவேன் மன்னன் றலைவன் றிருவுருக்கண்
டானைவேன் மன்னென் றுரைத்து.

## ஆசிரியம்.

(204) எனையாண் டருள எழுந்தரு ளிறைவா
உனையாண் டடியே னுவந்தினிக் காண்பேன்
தேவர்க் கரியாய் செம்பொன் மேனியாய்
பாவைக் கொருபால் பரிந்தளித் தவனே
5 ஒருபொரு ளாகா வூனமா ரெனக்கு
வருபொரு ளுரைகள் வழங்கிட வந்தாய்
ஏறு தழீஇய வெம்மா னின்னடிப்
பேறு தழீஇய பேதையேற் கருளி
வந்தென் மனைவாய் மாலுறக் காட்டி
10 முந்தென் மனக்குறை முழுதொழிப் பவனே
அருளுடை யீசா வடியவர் நேசா
மருளுடைப் பவநோய் மாற்றிடு மருந்தே
அன்பர்க ளாடிடு மமுத வாரியே
வன்பர்க ளணுகா வளர்செவ் வனலே
15 நின்பத மேத்தி நெஞ்சநெக் குருகி
நன்பத மேவ நானிங் குறுவேன்
அம்மையு மப்பனு மாகிய வரசே
எம்மையும் பணிகொ ளெந்தாய் போற்றி
ஏறுடை யெம்மா னிணையடி போற்றி
20 தேறுமெய் யன்பர் திருவே போற்றி
காமனை யெரித்த கடவுளே போற்றி
தாமநற் கொன்றை தரித்தாய் போற்றி
நீலகண் டத்து நெடுந்தகை போற்றி
காலனைக் காய்ந்த கனைகழல் போற்றி
சாலநாள் புவியிற் றளர்ந்தேன்
26 ஏலநின் பாலே யெய்துவ னினியே.

(205) நண்ணார் புரமெரித்த அண்ணா மலைநாதா
தண்ணார் மதிசூடுந் தற்பரனே—பண்ணார்ந்த
சொற்கொண்டு பாடித் தொழுவார் துயர்தீர்ப்பாய்
எற்கொண்டு சேருன் னிடம்.

வல்லாளன் முத்திபெறுதல்.

(206) என்னத் துதிசெய்த வந்தலாம் வல்லாளன்
றன்னைப் பெரியோன் றனதுருவில்—மன்னக்
கருணை புரிந்து கவின்கோயில் புக்கான்
அருணை நகரத்தி லன்று.

(207) கண்டிருந்த மாந்தர்களுங் கண்மாரி சிந்தினார்
விண்டிருந்த தேவர் விரைமலர்தூய்ப்—பண்டிருந்தப்
பாடினார் மற்றோர் பரம னருணினைந்து
சூடினார் பொற்றாட் டுணை.

(208) அம்புவியோர் கேட்டே யதிசயித்து மாமன்னர்
தம்பெருமை கூறியே தாமகிழ்வார்—உம்பர்
பெருமான் கருணை பெரிதென்பார் பார்செய்
அருமா தவம்பெரிதென் பார்.

(209) பார்போற்றுந் தெய்வப் பதியருணை வல்லாளன்
சீர்போற்று வாரெங்குஞ் சேர்ந்தார்த்தார்-பேர்போற்
கண்ணுதலார் வந்தே கருணையா லாண்டதிறம் [றிக்
எண்ணுதலார் வல்லா ரிவண்.

(210) அன்றுமுத லாவென்று மண்ணுமலை தனில்வாழ்
வென்றிமிகு வல்லாளன் மெய்ச்சரிதை- துன்றுலகோ
நாடற் கினிதாய் நலமெலா மெய்துவிக்கும் [ர்
பாடற் கினிதாம் பலர்க்கு.

## வாழி.

(211) வாழ்க பெருமான் வளரருணை வல்லாளன்
வாழ்கவின்பேர் வாழ்க மகிழ்கதையைச்-சூழ்கருத்தா [ய்
இப்பாரிற் கற்பாரும் இன்பாகக் கேட்பாரும்
தப்பாது வாழ்வார் தழைத்து.

வல்லாள மகாராஜன் சரித்திரம்
முற்றிற்று.

---

நூற்செய்யுள்-211. காப்புச்செய்யுள்-7. ஆக 218.

## தனியன்.

வரையா தளிவள்ளல் வல்லாளன் சீரை
உரையார்ந்த பாவா லுரைத்தான்-துரைவடிவேல்
என்பான் றுரைசாமி யிவ்வுலகி லேசான்றோர்
அன்பான் றுரைசா லவன்.





புதுவை, ஸ்ரீ மீனுக்ஷி குமரவேல் பிரஸ்ஸில்
பதிக்கப் பெற்றது.

